ஸ்ரீராம்ஜெயம்

# திரு அரியக்குடி மூலைக்கருடன் "பிரபந்தம் பதினாறு"



பிரமாதி வருடம் ஆவணி மாதம் 30ம் தேதி
திருக்குட நன்னீராட்டு விழா

வெளியீடு
சித. நா. செந்தில்குமார்,
அரியக்குடி.

ACC.No. 322203

ஸ்ரீ ராமஜெயம்

# முகவுரை

உத்திஷ்ட கோவிந்த உத்திஷ்ட கருடத்வஜ

எனக் கருடனை முன்னிறுத்தியே ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதமும் தொடங்குகிறது. புட் கொடி உடைய கோமான் எனப் புருடோத்தமனை தொண்டர் அடிப் பொடி ஆழ்வார் புகழ்வார் காரணா கருடக் கொடியானே என்றதோடு பைந்தலையை நாகப்பகைக் கொடியானுக்கு பல்லாண்டும் பாடிமகிழ்வார் பெரியாழ்வார்

ஸ்ரீ கருடன் வாசுதேவனுக்குக் கொடியாகவும், வாகனமாகவும் ஆன பெருமையுடையவர் இதைச் சங்க இலக்கியத்தில் எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றான பரிபாடல் வரிகளில் காணமுடிகிறது. வில்லிபுத்தூராரும் பறவை ஏறும் பரமபுருடா என விளிப்பார் (அழைப்பார்)

கருடனின் பெருமையும், கருணையும் கணக்கிட முடியாதவை ஸ்ரீ ராமானுஜ சித்தாந்தத்தையும், ஸ்ரீ வைஷ்ணவத்தையும் தேசமெலாம் பரப்பிய ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் பெரிய பெருமாளால் கவிதார்க்கிகசிம்மம் எனவும் பெரிய பிராட்டியாரால் ஸவர்வத தந்திர ஸ்வதந்திரர் எனவும் பாராட்டப்பட்டவர் அவர் கருடனை உபாசித்தே ஸ்ரீ ஹயக்கிரீவரை நேரில் கண்டுகளிக்கும் பேறுபெற்றார் கருட வழிபாடு கண்ணனை விரைந்து நம்முன் கொண்டுவரும்

பூமிப்பிராட்டியை ஒருமகளாய்ப் பெற்றுத் திருமகள் போலக் கோதையை வளர்த்த பெரியாழ்வாரான ஸ்ரீ விஷ்ணு சித்தர் கருடாம்சகராகத் தோன்றியவர் ஸ்ரீ கருடனை, கருடன், கருடமூர்த்தி, கருடபகவான், கருடாழ்வார், பெரியதிருவடி, பட்சிராஜன், புள்ளரயன் என அழைக்கிறார்கள் கருடனுக்குத் திவ்ய தேசங்களில் தனிச் சந்நிதிகள் இருத்தலோடு சில இடங்களில் திருக்கோயில்களும் இருந்ததாகவும் இருப்பதாகவும்

அறிகிறோம். சீதை ஸ்ரீ ஆண்டாள் தனது திருப்பாவைப் பாசுரத்தில் "*புள்ளும் சிலம்பின புள்ளரையன் கோயிலில்*" எனக் குறிப்பிடுகிறார். பட்டர்பிரானும் "*பூமருவிப் புள்ளினங்கள் புள்ளினரையன் புகழ் கழறும் புனலரங்கம்*" எனப் பெரிய கோயிலில் கருடனுக்கும் கோயில் இருந்ததாகக் கூறுவார் இன்றும் திருவரங்கத்தில் பெரியகருடமூர்த்தியோடு கருட மண்டபத்தையும் காணலாம்.

கருடகிரி, கருடாசலம், கருடன் குன்று, கருட தீர்த்தம் இன்றும் இருக்கின்றன. அவ்வகையில் அரியக்குடி சீனிவாசன் திவ்ய தேசமான திருக்கோயிலில் ஈசான மூலையில் (வடகிழக்கில்) ஸ்ரீ கருடன் கோயில் கொண்டு மூலைக்கருடனாகக் கடாட்சிக்கிறார். வேண்டுவார்க்கு அருளை விரைந்து தந்து கொண்டிருக்கிறார்.

ஸ்ரீ கருடனையும், அவன் கருணையையும் வியந்தும் விரித்தும் கூறும் நூலே "*பிரபந்தம் பதினாறு*" ஆகும் பிரபந்தம் என்றால் "*பாடல்*" என்று பொருள். பதினாறு அப்பாடல்களின் எண்ணிக்கையைக் குறிக்கும் "*இனியவை நாற்பது*" "*ஐந்திணை ஐம்பது*" "*பாரதி அறுபத்தாறு*" "*முருகன் முப்பத்தாறு*" என்பதைப் போல

பெரியதிருவடியின் பெருமை பேசும் நூலாகப் பிரபந்தம் பதினாறு இயற்றப் பட்டுள்ளது. பதினாறு செய்யுட்களில், அறுபத்து நான்கு வரிகளில், அறுசீர்விருத்த யாப்பில், சொற்சுவை, பொருட்சுவை, நிறைந்து பாடல்கள் அனைத்தும் தெளிந்த நீரோடைபோல் இருக்கின்றன. இதனைப் பாடிய புலவர் காரைக்குடி திரு. சித. சிதம்பரம் ஆவார். அவர் எடுத்துக் கொண்ட கருத்தை அழகாகத் தொகுத்தும் முடித்தும் இருக்கிறார். இதில் துய்த்து உணரத்தக்கன பல என்றாலும் உய்த்து உணரத்தருவன அதனினும் பலவாகும். எடுத்துக்காட்டாக விரிவஞ்சி இரண்டினை மட்டும் இங்கு குறிக்கின்றேன்.

"எவ்விடம் ஏறினாலும் எவ்விடர் நேரினாலும்
செவ்விடம் உன்பதந்தான் சேல்லிடம் உன்னிடம் தான்" – இது

துய்த்து உணரத்தக்கது. இதில் வைணவச் சித்தாந்தமான சரணாகதியை மயக்கமற உணர்த்துகிறார் "*தருதுயரம் தடாயேல் உன்சரண் அல்லால் சரண் இல்லை*" எனக்குலசேகரரும் அலகிலா விளையாட்டுடையார் அன்னவிர்க்கே சரண் நாங்களே எனக் கம்பரும் கூறியுள்ளதை நோக்குக ஸ்ரீ வேங்கடேச பிரபத்தியும் ஸ்ரீ வேங்கடேச சரணென சரணம் பிரபத்யே என்று வேண்டுகோள் விடுக்கும் சரணாகதியே மிகச்சிறந்த தெய்வச் சார்பு நிலை இதையே நம் ஆசிரியர் கருடனிடம் செல்லுங்கள் அவன் கவனித்துக் கொள்வான் என்கிறார்.

திருமாலின் சங்காகிய பாஞ்ச சந்யத்திற்கு பெரியாழ்வார் பல்லாண்டு பாடினார். அவர்மகளாம் கோதையோ "*கற்பூரம் நாறுமோ சொல்லாழி வெண்சங்கே*" என பத்துபா சுரங்களே பாடினார் நம்புலவர் சிதம்பரமும் தாம்பாடிய பிரபந்தத்தில் மானிடத்திற்கு இன்றி அமையாததான அகவாழ்க்கை, புறவாழ்க்கை, ஆகிய வற்றை அச்சுதனின் வேய்ங்குழலும் வலம்புரியும் தருவதாகக் கூறுகிறார். மேலும் பார்த்திபன் முன் மொழிந்த கீதையைத் தருமருக்காக சமரிலே கீதை கேட்கும் எனப்பாடியிருப்பது உலக தருமத்தைக் காக்க உத்தம நூலான கீதை ஒலிக்கப்பட்டது எனக் கூறி நம்மை உய்த்துணற வைக்கிறார்.

இன்னும் "*நீலமா மேகந் தொட்டு நிமிர்ந்திடும் வேங்கடத்தான்*" எனத் திருவிக்கிரமா அவதாரத்தைத் தொட்டுப் பிரபந்தத்தைத் தொடங்கி "*பெருமாளால் ஞாலம் வாழ்க*" என அச்சாவதாரத்தைக் கூறி முடிக்கிறார் இப்படி வானம் முட்டிப் பூமி முடியப் பாடிய செய்யுள் வரிகளின் வார்த்தை தோறும் வரலாறாக அடுக்கிச் செல்கிறார் சுருக்கமாக இதுபயில் தொறும் நயம்பயக்கும் நூலாகும்.

இதனைக் கற்றுணர்ந்து அரியக்குடி ஸ்ரீ மூலைக்கருடனின் திருவருளுக்கும் உரியர் ஆகுக.

இந்த அழகிய நூலை குறைவொன்றும் இல்லாத கோவிந்தன் குடியடியராகிய அரியக்குடி நாச்சான் செட்டி பெத்தபெருமாள் குலத்துவந்த சித.நா. செந்தில்குமார் அழகுற அச்சிட்டு வெளியிடுகிறார். அவருக்கும் இதில் அவருடன் செயலாற்றிய அனைவர்க்கும் சுவாதிச் செல்வனின் (ஸ்ரீ கருடன் நட்சத்திரம்) அருள் துணைநிற்குமாக.

இனிய இப்பிரபந்தம் தென்திருப்பதியான அரியக்குடிபெருமாள் திருக்கோயில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகத் திருநாளன்று வெளியிடப்படுகிறது. இத்திருக்கோயில் குடமுழுக்குத் திருப்பணியில் இரவும் பகலும் இடையறாச் சிந்தனையுடன் தேனீக்களினும் சுறு சுறுப்பாய்ச் செயலாற்றிய காரைக்குடி திரு. சா. லெ. நா. சா. நாராயணன் அவர்கள் முதலாய அவர்தம் குழுவினர்க்கும், இன்னும் இதில் இணைந்து நின்ற எண்ணிலாப் புகழ்ச்செல்வர்கள் ஆகிய திருமால் தொண்டர்கள் அனைவர்க்கும் ஸ்ரீ ஆண்டாள் போற்றிப் புகழ்ந்த திருவேங்கட முடைய ஸ்ரீ நிவாசனும் ஸ்ரீ அலர்மேன் மங்கைதாயாரும் ஸ்ரீ கருடனும் அருள் அளித்துக் காப்பராக.

உற்றேன் உகந்து பணிசெய்து உன்பாதம் பெற்றேன் இது நம்மாழ்வார் திருவாய்மொழி

வாழிமூ லைக்கருடன் வாழிசங்கு சக்கரமும்
வாழிமங்கை ஆண்டாள் அனுமனுமே – வாழி
அரியக் குடிப்பெருமாள் ஆங்குறையும் மக்கள்
உரியபல பேறெல்லாம் உற்று

ஸ்ரீ வேங்கட ஸ்ரீ நிவாசாய மங்களம்.

**அரியக்குடி சித. வேங்கடாசலம்**

உ

ஸ்ரீராமஜெயம்

# திரு அரியக்குடி மூலைக்கருடன்

## "பிரபந்தம் பதினாறு"

கவிஞர் : சித. சிதம்பரம்

நீலமா மேகந் தொட்டு
நிமிர்ந்திடும் வேங்க டத்தான்
சீலமார் அரியை தன்னில்
சேவுகன் பக்திக் காகக்
கோலமே கொண்ட போது
கோயிலின் வடகிழக்கில்
மூலையிற் கருடனாகி
முப்போதும் காவல் செய்வாய்!

அரிஅவன் சீரங்கத்தில்
அறிதுயில் கொள்ளும் ரூபன்
அரியவன் எளியோம் நெஞ்சில்
அரிதிலும் எளிதாய் நிற்போன்
கரியவன் யானை காலைக்
கொடியதாம் முதலை கவ்வக்
கரியவன் காக்க ஏறும்
கருடனே! வாகனத் தோய்!

தாமரைப் பதத்தன் செம்மைத்
தாமரை மனத்தன் ஆழ்வார்
மாமறை பிரபந் தத்தில்
வளர்கின்ற செல்வர் ஞாலம்
தாமெனப் புரந்து காக்கச்
சக்கரம் சங்கி னோடு
தாமோ தரனாய் வந்தோன்
தமியனே! கருட தேவா!

பூர்விகச் சோழ தேசப்
புகாரை விட்டு வந்தும்
பூர்விக வணிகம் பேணிப்
பெருங்கடல் ஓடி ஈட்டி
வேரென அறத்தைத் தாங்கும்
மேன்மைகொள் நகரத்தார்கள்
சீர்வளர் சேவு செட்டி
தேடலில் கிடைத்த தேவே!

திருப்பதிச் சடாரி யோடு
சுயம்புவாய் அரியாய் வந்து
திருமயம் அக்னி சாற
பெருமனார் சிலை கொணர்ந்து
அரியவன் குடியைக் கொண்டான்!
அவன் மதில் ஏறி நின்றாய்!
திருநிறைச் சுவாதி நாளில்
தீர்த்தமும் ஆடு கின்றாய்!

திவ்விய தேசந் தன்னில்
திருமாலின் முன்னே நீயும்
பவ்விய மாக நிற்பாய்
படர்கை இரண்டும் கூப்பி!
செவ்வியன் வேங்க டத்தான்
அலர்மேல் மங்கை யோடு
உய்திசெய் இத்தலத்தில்
உயர்வுகள் தந்து நிற்பாய்

பத்தான அவதாரங்கள்
பத்ம நாபன் கொண்டான்
பத்திலும் பக்தருக்காய்
பரம்பொருள் இரங்கிவந்தான்
எத்தர்கள் அரக்கர் தம்மால்
இவ்வுல கிருண்ட போது
சத்தியம் காக்க வந்தே
சக்கரத் தாழ்வார் ஆனான்!

விரிசங்கம் ஊதும் போது
வெற்றியின் முழக்கம் கேட்கும்
தருமரைக் காக்கும் போது
சமரிலே கீதை கேட்கும்
விரிகுழல் ராதை கேட்கும்
வேய்ங்குழல் பூமி வேட்கும்
அரியக்குடித்தலத்தில்
ஆதவன் வணங்க நிற்கும்

பதியெனத் திருமகட் காய்
        பரந்ததோள் கொடுத்து நின்றான்
அதிசயம் அனைத்தும் செய்வான்
        அவனையும் சுமந்திருப்பாய்
விதியெனும் அவனை அல்லாப்
        பிறப்பையார் காக்க வல்லார்
கதியெனச் சரணடைந்தோம்
        கருடனே ஆழ்வாரப்பா!

கருதன் தாய் வயிற்றில்
        காப்பினில் இருப்ப போல
கருடன் நினது காப்பில்
        கண்ணனின் வண்ணம் கண்டோம்
வருடங்கள் யுகங்கள் என்று
        மாறிடும் எமது வாழ்வின்
நிமிடமும் சீர்மை யாக
        விமலனே காப்பு! காப்பு!

எவ்விடம் ஏறினாலும்
        எவ்விடர் நேரினாலும்
செவ்விடம் உன் பதந்தான்
        செல்லிடம் உன்னிடந்தான்
சிவ்வென்று தேங்காய்ச் சூறை
        சிதறுமே அதனைப் போல
வவ்விய இடர்கள் நீக்கி
        வளங்களைப் பொழிவாய் போற்றி!

பாவிகள் இடையில் யாங்கள்
பட்டதோர் துயரம் தீர்ப்பாய்!
கூவினேன் குரலைக் கேட்பாய்
கொள்ளென நிதியம் ஈவாய்!
தேவியார் செல்வம் சேரும்
சேவையிற் குடும்பம் வாழும்!
காவியக் கண்ணன் ஏறும்
கருடனே வழியைப் பேணும்

குடங்கள் நூற்றி யெட்டால்
குளிப்பாட் டுகின்றோம் யாங்கள்
தடங்கல்கள் பில்லி சூன்யம்
தகர்த்திடச் சூறைத் தேங்காய்
மடங்குகள் கொண்டுடைத்தோம்
மதிலிலே இளநீர் வெள்ளம்
தடங்கணாள் இலக்குமித்தாய்
தயாபர னோடு பார்ப்பாய்!

பார்த்தனைக் குருட்சேத் ரத்தில்
பகைவரை வெல்ல வைத்தோன்
பார்தனை விழுங்கிக் காட்டும்
ஆயர்கோன் கண்ணன் ஆனோன்
பாற்கடல் ஆதிசேடன்
படுக்கையில் தாங்கும் வள்ளல்
பார்த்திபன் பார்த்தே நிற்பாய்!
பிரார்த்தனை பலிக்க வைப்பாய்!

மூலையிற் கருடனானாய்!
　　மூலமே கருடனானாய்!
ஓலையில் எழுதி எங்கள்
　　உள்ளத்தில் எழுதும் வேண்டல்
சாலவே பலிக்கச் செய்வாய்!
　　சகலமும் நலங்கள் செய்வாய்!
மாலவன் மாதவன் அன்பை
　　வழங்கிடும் கருடா போற்றி!

அரியநற் குடிகள் சான்றோர்
　　அரியக் குடியோர் வாழ்க!
விரிவடை புள்ளி கூடி
　　வியன் அறம் ஓங்கி வாழ்க!
திருஅலர் மங்கை வாழ்க
　　தேவியாம் ஆண்டாள் வாழ்க!
பெருமாளின் வைணவச் சீர்
　　பெருகியே ஞாலம் வாழ்க!

கவிஞர் : சித. சிதம்பரம்
*ப.மு.சித.வீடு*
"பழனியப்ப விலாசம்"
134, முத்துராமன் தெரு,
முத்துப்பட்டணம்,
காரைக்குடி – 630 001.

## S.R. டிராவல்ஸ்

சொகுசுப் பேருந்து

தினசரி கோவை, திருப்பூர் செல்ல
டிக்கெட் முன்பதிவு செய்ய

29, சண்முகயோகீஸ்வரர் தெரு,
செக்காலை ரோடு, காரைக்குடி.
போன் : 22682, 35941

23, சரஸ்வதி வாசகசாலை தெரு,
இளங்கோ கல்யாண மண்டபம்,
தேவகோட்டை
போன் : 73434

## V.B.T. டிராவல் ஏஜென்ஸி

டவுன் பஸ் ஸ்டாண்ட் காம்ப்ளக்ஸ்,
காந்திபுரம், கோயம்புத்தூர்.
போன் : 494077

## மஹாராஜா டிராவல்ஸ்

பழைய பேருந்து நிலையம், திருப்பூர்.
போன் : 747152, 745113